21st January 1961]

**MR. SPEAKER :** கனம் அங்கத்தினர்கள் சட்ட சபையில் பேசும்பொழுது மரியாதையான, நாணயமான வார்த்தைகளை உபயோகப்படுத்த வேண்டும். மற்றவர்களுக்கு கோபம் வரும்படியான வார்த்தைகளை உபயோகப்படுத்தக்கூடாது.

SRI K. VINAYAKAM : Are the Government aware of the fact that the concerned Madras Advocates' Association is fast contemplating to rescind that resolution and to pass a resolution expressing their confidence in the Advocate-General?

THE HON. SRI C. SUBRAMANIAM : Anyhow I am not interested in the matter. It is for the Advocates' Association either to pass the resolution or rescind the resolution. Government are not interested in that matter.

SRI T. S. RAMASWAMY : May I know whether Government are aware of the reasons behind the no-confidence resolution passed by the Bar Association? May I know whether it has been communicated to Government and if so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : I thought the hon. Member would have read the resolution when he put the question. The resolution passed should contain the reasons.

*Publication of Text-books*

*** 79 Q.—SRI A. VEDARATHNAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடம் ஆகஸ்ட்டு மாதம் 16 தேதியில் 201-வது எண் கேள்விக்களித்த பதிலையொட்டி இ.எஸ்.எல்.சி. வகுப்புகளுக்குப் பாடப் புத்தகங்கள் அரசாங்கம் வெளியிடுகின்றதா? அப்படியானால் என்ன என்ன புத்தகங்கள்?

(இ) இவை காலதாமதமாய் வெளிவருவதால் இதைத் தவிர்க்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. Two books are published by Government for E.S.L.C., viz., English Text Book and Tamil Text Book.

(*b*) There has been no delay in the publication of these books.

**SRI A. VEDARATHNAM :** அரசாங்கம் வெளியிடுகிற அந்த புத்தகங்கள் உரிய காலத்தில் அச்சிடப்பட்டும், தேவையான அளவு அச்சிடப்படாத காரணத்தினால், வெகு விரைவிலே அவைகள் தீர்ந்துபோய், பின்னால் வருகிற பள்ளிகளுக்கு புத்தகங்கள் கிடைக்காத நிலை ஏற்படுகிறது. எனவே, தேவையை அறிந்து அதற்கு காலம் தாழ்த்தாமல் உரிய காலத்தில் புத்தகங்கள் பள்ளிகளுக்கு கிடைக்கும்படிச் செய்ய அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுக்குமா?

[21st January 1961

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இதுவரையிலும் புத்தகங்கள் கிடைக்கவில்லை என்று யாரிடத்திலிருந்தும் புகார் வரவில்லை என்று எனக்கு குறிப்பு தரப்பட்டிருக்கிறது. அத்துடன் இன்னும் அதிகமான பிரதிகள் அச்சடித்து பிரஸ்ஸில் வைத்திருக்க வேண்டும் என்று உத்தரவு போடப்பட்டிருக்கிறது. ஆகையினாலே எந்தக் காலத்திலும் புத்தகங்கள் இல்லை என்று சொல்லுவதற்கு இல்லை.

*Compulsory National Service by Students*

* 80 Q.—**SRI A. VEDARATHNAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) டெல்லியில் 1960-ம்ஆண்டு ஆகஸ்ட்டு மாதம் 19-ம் தேதியில் நடந்த கல்வி இலாகா காரியதரிசிகள் மகாநாட்டில், மெட்ரிகுலேஷனுக்குப் பிறகோ, அல்லது மேல் செகண்டரி கட்டத்திற்குப் பின்போ, மாணவர்களுக்குக் கட்டாய தேசீய சேவை திட்டத்தை அமல் நடத்துவது பற்றிய முடிவென்ன ?

(இ) இதில் நம் மாநிலத்தின் சார்பில் சென்றது யார் ? நம் மாநிலத்தின் சார்பாக இதுபற்றி தெரிவிக்கப்பட்ட அபிப்பிராயம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The matter was discussed at the Conference. No decision was taken.

(*b*) Secretary to Government, Education and Public Health Department attended the conference on behalf of this State. The principles underlying the scheme were welcomed. But various practical difficulties in giving effect to it were pointed out and it was suggested that the scheme should be suitably integrated with the academic courses in the Higher Secondary and University stages.

**SRI A. VEDARATHNAM :** ஹையர் செகண்டரி முடித்தபின் இந்த சேவையில் அவர்களை ஈடுபடுத்துவதைக் காட்டிலும், அவர்கள் பள்ளிப் படிப்பில் இம்மாதிரி சேவை மனப்பான்மையையும், சேவையில் ஈடுபடுகிற வாய்ப்பையும், அவர்களுடைய பாட திட்டங்களில் இணைப்பது நன்றாக இருக்கும் அல்லவா ? அதுபற்றி அரசாங்கம் யோசிக்குமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** அதைத்தான் என்னுடைய விடையில் சொன்னேன். அதுமாதிரி இந்த சர்க்கார் அங்கு சிபார்சு செய்திருக்கிறது.

MR. SPEAKER : Questions are over.